அடுக்கிவருவது மதனியல்பாகும் ... ... ௵

(இதன்பொருள்.)

அடுக்கிவருவதும்-ஒருபொருண்மேன் மூன்றடுக்கிவருவதும் அதனியல்பாகும்-வெள்ளொத்தாழிசையாகும்...... ......௵

(உதாரணம்.)

அன்னயறங்கொனலங்கிளர்சேட்சென்னி ... ௵
ஒன்னருடைபுறம்போலநலங்கவர்ந்து...... ௵
துன்னான்றுறந்துவிடல்.................. ௵

ஏடியறங்கொனலங்கிளர்சேட்சென்னி...... ௵
கூடாருடைபுறம்போலநலங்கவர்ந்து ...... ௵
நீடான்றுறந்துவிடல். ௵

பாவாயறங்கொனலங்கிளர்சேட்சென்னி ...௵
மேவாருடைபுறம்போலநலங்கவர்ந்து......௵
காவான்றுறந்துவிடல்...... ............... ௵

என-ஒருபொருண்மேன் மூன்றடுக்கியும்- வெள்ளொத்தாழிசைவந்தமைகாண்க.

(௬௫)

மூன்றடிமுதலாவேழடிகாறும்வந் ... ௵
தீற்றடிசிற்சிலசீர்தபநிற்பினும் ... ...௵
வேற்றொலிவிரவினும்வெண்டுறையாகும் ௵

(இதன்பொருள்.)

| | | |
|---|---|---|
| மூன்றடிமுதலா ... | மூன்றடிமுதலாக ... | ௵ |
| ஏழடிகாறும்வந்து | ஏழடியிறுதியாகப்போந்து ... | ௵ |
| ஈற்றடி - | இறுதியடி ... | ௵ |
| சிற்சிலசீர் ... | சிலசிலசீர் ... | ௵ |
| தபநிற்பினும் | குறைந்துநிற்பினும் | ௵ |
| வேற்றொலிவிரவினும் | வேறோசைகலப்பினும் | ௵ |
| வெண்டுறையாகும் | வெண்டுறையாகும் | ௵ |

(உதாரணம்.)

தாளாளரல்லாதார்தாம்பலராய்க்காலென்றுமென்று ...*
யாளியைக்கண்டஞ்சியானையதன்கோடிரண்டும் *
பீலிபோற்சாய்த்துவிடும்பிலிற்றியாங்கே *

என-மூன்றடியாயீற்றடிகுறைந்தும்.

முழங்குதிரைக்கொற்கைவேந்தன்முழுதுலகுமேவல்செய முறைசெய்கோமான்,வழங்குதிறல்வாண்மாறன் மாச்செழியன் றக்கரியவைவேல்பாடிக், கலங்கிநின்றொலாங்கருதலாகாவணம்
இலங்குவாளிரண்டினாலிருகைவீசிப்பெயர்ந்...... *
தலங்கன் மாலைபவிழ்ந்தாடவாடுமிவள் ... *
பொலங்கொள்பூந்தடங்கட்கேபுரிந்துநின்றொலாம்
விலங்கியுள்ளந்கபவிளிந்துவேறுபவே *

என - ஏழடியாய்வேற்றொலிவிரவியும்
வெண்டுறைவந்தமைகாண்க-பிறவும் வந்துழிக்காண்க.

(௫௭)

என்னை

மூன்றடியானுமுடிந்தடிதோறுமுடிவிடத்துத் ... ........*
தான்றனிச்சொற்பெறுந்தண்டாவிருத்தம் வெண்டாழிசையே *
மூன்றடியாய்வெள்ளைபோன்றிறுமூன்றிழிபேருயர்பா... ...*
யான்றடிதான்சிலவந்தங்குறைந்திறும்வெண்டுறையே........*

என்றாராகலின்.

ஆசிரியப்பா நாற்சீரடியாயும்-இயற்சீரும் பிறசீருங்கலந்தும் கருவிளங்கனி கூவிளங்கனியென்னும் இருசீருங்கலவாமலும் தன்றளையும் பிறதளையுமயங்கியும் மூன்றுமுதலிய பலவடிகளால்வருவது.

அந்தவடியினயலடிசிந்தடி... ...... ... *
வந்தனநேரிசையாசிரியம்மே... ...... ...*

இச்சூத்திரமென்னுதலிற்றோவெனின்.

நேரிசையாசிரியப்பாவும்-இணைக்குறளாசிரியப்பாவும்-நிலைமண்டில வாசிரியப்பாவும் - அடிமறிமண்டில வாசிரியப்பாவும்

ஆசிரியத்தாழிசையும் - ஆசிரியத்துறையும் - ஆசிரியவிருத்தமு முணர்த்துவான்றொடங்கி - நேரிசையாசிரியப்பாவாமாறுணர்த் துதனுதலிற்று.

(இதன்பொருள்)

அந்தவடியினயலடி... ஈற்றுக்கயலடி ... *
சிந்தடிவந்தன.........முச்சீரால்வருவது... ...*
நேரிசையாசிரியம்... நேரிசையாசிரியப்பாவாகும்*

(உதாரணம்)

பொற்றொடிபொதிந்தசிற்சபைபொலியப் *
பச்சிளங்கொடியொடுபடரும். *
செக்கர்வார்சடைக்கற்பகத்தருவே *

என-நேரிசையாசிரியப்பாவந்தமைகாண்க.

(௬௮)

ஆதியுமந்தமுமளவடியாகிக் *
குறளடிசிந்தடியென்றிரண்டு *
மிடைவரலிணைக்குறளாசிரியம்மே ... *

(இதன்பொருள்.)

ஆதியும் முதலடியும் *
அந்தமும் ஈற்றடியும் *
அளவடியாகி நாற்சீரடியாகி *
குறளடி இருசீரடியும் *
சிந்தடி முச்சீரடியும் *
என்றிரண்டும்-ஆகியவிரண்டடியும் *
இடைவரல் நடுவேவருவது *
இணைக்குறளாசிரியம்-இணைக்குறளாசிரியப்பாவாகும் *

(உதாரணம்.)

தண்ணெண்கடுக்கைகண்ணீர்கலுழ்தர *
வெண்மதிக் - ... கண்ணிசூடுங் *
கண்ணுதற் ... கடவுள் *
புண்ணியப் ... பொதுவிலாடும் *
... விளங்கு ... *

விண்மிசைபோகியவீடுபெறற்பொருட்டே ... ...*

என - இணைக்குறளாசிரியப்பாவந்தமைகாண்க.

(௩௧)

எல்லாவடியுமொத்திறினிலைமண்டில ... ...*
வகவலென்மனாறிந்திசினோரே... ... ......*

(இதன்பொருள்,)

எல்லாவடியுமொத்திறின் - அடியெல்லாமொத்துவருவது*
நிலைமண்டிலவகவல் - நிலைமண்டிலவாசிரியப்பாவாகும்*

(உதாரணம்.)

வேரல்வேலிவேர்க்கோட்பலவின் *
சாரனாடசெவ்வியையாகுமதி *
யாரஃதறிந்திசினோரேசாரற் ... *
சிறுகோட்டுப்பெரும்பழந்தூங்கியாங்கிவ...*
ளுயிர்தவச்சிறிதுகாமமோபெரிதே ... ...*

என-நிலைமண்டிலவாசிரியப்பாவந்தமைகாண்க.

(௩௨)

எல்லாவடியுமொத்திடைகடைமுதலா... ... *
வுச்சரிப்பினுமோசையுமதன்பொருளு ... *
மழியாதுவரலடிமறிமண்டிலமே ... ... ... *

(இதன்பொருள்.)

எல்லாவடியுமொத்து-அடிகளெல்லாமொத்து...*
இடை ... இடைநிலையடியும் ... ... *
கடை ... கடைநிலையடியும் ... ... *
முதலா முதனிலையடியாக்கி ...*
உச்சரிப்பினும் ... உச்சரித்தாலும் ... ...*
ஓசையும் ... ... சந்தவின்பமும் ... *
அதன்பொருளும் அதனதுபொருளும்...*
அழியாதுவரல் - கெடாமல்வருவது ... *
அடிமறிமண்டிலம்-அடிமறிமண்டிலவாசிரியப்பாவாகும்

(உதாரணம்.)

தீர்த்தமென்பதுசிவகங்கையே ... ... ... *
ஏத்தருந்தலமெழிற்புலியூரே ... ... ... *
மூர்த்தியம்பலக்கூத்தனதுருவே ... ... *

என - அடிமறிமண்டிலவாசிரியப்பாவந்தமைகாண்க.

(சக)

ஏயகவன்முடிபிற்கியல்பாகும் ... ... ... *
ஆ ஈ ஐ ஓ ஆயுமாகும் ... ... ... ... ... *

(இதன்பொருள்.)

அகவல் ... ஆசிரியப்பா... ... ... ... *
ஏ ... ஏகாரமிறுதியாக ... ... *
முடிபிற்கு முடிவதே ... ... *
இயல்பாகும் சுபாவமாகும்... ... ... *
ஆ ஈ ஐ ஓ ஆய் இவ்வைந்தும் ... ... *
ஆகும் ஆகும் ... ... ... ... *

உ-ம்-வந்துழிக்காண்க.

என்னை.

கடையயற்பாதமுச்சீர்வரினேரிசைகாமருசீ ... *
ரிடைபலகுன்றினிணைக்குறளெல்லாவடியுமொத்து *
நடைபெறுமாயினிலைமண்டிலநடுவாதியந்தத்... *
தடைதருபாதத்தகவலடிமறிமண்டிலமே ... ... *

என்றுராகலின்.

(சஉ)

மூன்றடியொத்துமூன்றடுக்கியுந்தனிமை ... ... *
யாகியும்வரினகவற்றுழிசையே ... ... ... ... *

(இதன்பொருள்.)

மூன்றடியொத்து - மூன்றடியாகவெல்லாவடியுமொத்து
மூன்றடுக்கியும் ... ஒருபொருண்மேன்மூன்றடுக்கிவருவ
[னவும்.

தனிமையாகியும்வரின் ... மூன்றடியொத்துத்தனித்து
[வருவனவும்.
அகவற்றாழிசை ... ஆசிரியத் தாழிசையாகும்.*

(உதாரணம்.)

சிற்றம்பலத்துநடிக்குஞ்சிவபெருமான்......*
கற்றைச்சடைக்குமுடிக்குஞ்சுடர்த்திங்கள்...*
மற்றப்புனன்மங்கைவாணுதலையொக்குமால் *

பேரம்பலத்துநடிக்குஞ்சிவபெருமான் ... *
வார்செஞ்சடைக்குமுடிக்குஞ்சுடர்த்திங்கள் *
நீர்மங்கைகொங்கைக்குநித்திலக்கச்சொக்குமால்

பொன்னம்பலத்துநடிக்குஞ்சிவபெருமான் *
மின்னுஞ்சடைக்குமுடிக்குஞ்சுடர்த்திங்கள் *
அன்னநகைசெங்கைக்கணிவளையுமொக்குமால் -

என- ஒருபொருண்மேன்மூன்றடுக்கியும்.

சத்தமுமாகியசத்தத்தாற்பெறு ... ... ... *
மத்தமுமாகலின்னந்தன்கண்களே ... ... *
யுத்தமனேந்தெழுத்துருவங்காண்பன ... *

எனத்தனித்தும் - ஆசிரியத்தாழிசைவந்தவாறுகாண்க.

(சசா)

அளவடியாயீற்றயலடிகுறைநவு ... ...*
யீற்றயலடிகுறைந்திடைமடக்காக ... ...*
வருநவுமிடையிடைகுறைந்துவருநவு ... *
மகவற்றுறையெனவழையப்படுமே ... ...*

(இதன்பொருள்.)

அளவடியாய் ... நான்கடியாய் ... ... ... ...*
ஈற்றயலடிகுறைநவும் - ஈற்றுக்கயலடிகுறைந்துவருவனவும்
ஈற்றயலடிகுறைந்து - ஈற்றுக்கயலடிகுறைந்து ......*
இடைமடக்காகவருநவும் இடைமடக்காகவருவனவும் ...*
இடையிடைகுறைந்துவருநவும்- இடையிடைகுறைந்துவருவ
[னவும்.
அகவற்றுறை . ஆசிரியத்துறையாகும் ... ...*

(உதாரணம்.)

நாகம்பொதிசடைமேனண்மதியும்வாண்மதிபோனங்கைகங்குல்
மேகஞ்செய்கூந்தன்மிலைச்சுந்தலைக்கலனும்விளங்குந் தோற்றம்
ஆகம்பகுந்தளித்தவந்நாளிலம்பலத்தான் ... ... ※
மாகம்பதியுமதியும்பகுந்தளித்தவண்ணம்போலும் ... ※

என - ஈற்றயலடிகுறைந்தும்.

மாயிருஞாலத்துமன்னுயிர்கள்கண்களிப்பமன்றுளாடும் ※
நாயகன்கண்டங்கறுத்தன்றேபொன்னுலகைநல்கிற்றம்மா
நாயகன்கண்டங்கறுத்தேலந்நாட்டமரர் ... ... ... ※
சேயிழைமாதருக்குச்செங்கைகளுங்கொங்கைகளுஞ் சிவக்கு
[ம்போலும்

என- ஈற்றயலடிகுறைந்திடைமடங்கியும்.

உண்டாங்கெனினுமிலதென்றறிஞர்கள்பொய்யெனப்புகலவு மெய்யெனப்பெயர்பெற் - றன்றுமுனமின்றுமெனவுளதாய்மாய்வதுநிலையில்யாக்கை ※

கண்டாங்கிகழுங்கிழமுதிர்மையச்சைவளிபித்தென மெய்தரும்வித்திற் - கடலிற்றிரையெனவுடலிற்றிரையொடுகலியாநின்றனநலியுநோய்கள்... ... ... ... ... ... ... ※

புண்டாங்கயின்முக்குடுமிப்படையொடுமெயிறலைத்தழல் விழித்துயிருணக் கனல்சேர் - புகையாமெனநிழலாமெனத்திரியாநின்றது கொலைசெய்கூற்றம்... ... ... ... ...※

விண்டாங்ககலுபுமெய்ப்பொருடுணிவோர்மின்பொலிபொன்புனைமன்றிலெம்முயிராம் - விமலன்குஞ்சிதகமலங்கும்பிடவேண்டுவவேண்டார்விண்மிசையுலகே ... ... ... ※

என-இடையிடைகுறைந்தும்ஆசிரியத்துறைவந்தமைகாண்க,

(௪௪)

கழிநெடிலடிநான்கொத்திறினகவல் ... ...※
விருத்தமென்மனோர்மெய்யுணர்ந்தோரே ...※

(இதன்பொருள்.)

கழிநெடிலடிநான்கு - கழிநெடிலடிநான்காய் ... *
ஒத்திறின் ... தம்மிலளவொத்துவருவது ...*
அகவல்விருத்தம் -ஆசிரியவிருத்தமாகும் ... *

(உதாரணம்.)

கனமளித்த பைங்காவில் வெண்டரளமும் பவளமுங்கமுகீனப்*
புனமளித்தபூங்கொன்றைபொன்சொரிதரப் புண்ணியமலர்தில்
வனமளித்தமேயெனினுமோரானந்தமாக்கடறிளைத்தாடும் [லே
அனமளித்தவேழ்பொழிற்குமோர்பலமென்பதம்பொனம்பலந்
தானே. *

என - ஆசிரியவிருத்தம்வந்தமைகாண்க.

பிறவும்வந்துழிக்காண்க.

(சரு)

என்னை

தருக்கியற்றாழிசைமூன்றடியொப்பனநான்கடியா ... *
யெருத்தடிநைந்துமிடைமடக்காயுமிடையிடையே......*
சுருக்கடியாயுந்துறையாங்குறைவிறுல்சீரகவல் ......*
விருத்தங்கழிநெடிஞன்கொத்திறுவதுமெல்லியலே. ...*

என்றாராகலின்.

கலிப்பா.

நேரீற்றியற்சீரும்-நிரைநடுவாகியவஞ்சியுரிச் ... *
சீரும்வாராது-நிரைமுதலாகியவெண்பாவுரிச் ...*
சீர்மிக்கு-நேரடித்தாய்-கலித்தளையும்- ... ... *
அயற்றளையும்விரவிவருவது. ... ... *

தரவேதாழிசைதனிச்சொற்சுரிதக ... ... *
மெனுநான்குறுப்பினதொத்தாழிசைக்கலி...*

இச்சூத்திரமென்னுதலிற்றோவெனின்.

நேரிசையொத்தாழிசைக்கலிப்பாவும் - அம்போதரங்கவொத்
தாழிசைக்கலிப்பாவும் - வண்ணகவொத்தாழிசைக்கலிப்பாவும்-

வெண்கலிப்பாவுந்தரவுகொச்சகக்கலிப்பாவும்- தரவிணைக்கொச்சகக்கலிப்பாவும்சிஃறாழிசைக்கொச்சகக்கலிப்பாவும்பஃறாழிசைக்கொச்சகக்கலிப்பாவும்- மயங்கிசைக்கொச்சகக்கலிப்பாவும் கலித்தாழிசையும்- கலித்துறையும்-கலிவிருத்தமு முணர்த்துவான்றொடங்கிநேரிசையொத்தாழிசைக்கலிப்பாவாமாறுணறு......*

இதன்பொருள்.

தரவு ... ஒருதரவும் ... ... ...*
தாழிசை ... மூன்றுதாழிசையும் ... *
தனிச்சொல் தனிச்சொல்லும்... ... *
சுரிதகம் ... சுரிதகமும் ... ... *
எனும் ... என்றுகூறப்பட்ட... ...*
நான்குறுப்பினது-நான்கவயவங்களையுடையது* [கும்.
ஒத்தாழிசைக்கலி- நேரிசையொத்தாழிசைக்கலிப்பாவா

(உதாரணம்.)

வாணெடுங்கண்பனிகூரவண்ணம்வேறாய்த்திரிந்து ... *
தோணெடுந்தகைதுறந்துதுன்பங் கூர்பசப்பினவாய்ப் *
பூணெடுங்குமுலைகண்டும்பொருட்பிரிதல்வலிப்பவோ .

இது-தரவு.

சூருடையகடுங்கடங்கட்சொலற்கரியவென்பவாற் ......*
பீருடையநலந்தொலைப்பப்பிரிவரோபெரியவரோ.........*
சேணுடையகடுங்கடங்கட்செலற்கரியவென்பவா ... ...*
நாணுடையநலந்தொலையநடப்பாரோநல்லவரோ.........*
சிலம்படைந்தவெங்கானஞ்சீரிலவேயென்பவாற் ... ...*
புலம்படைந்தநலந்தொலையப்போவாரோபொருளிலரோ *

இவை-மூன்றுந் தாழிசை.

எனவாங்கு.

இது-தனிச்சொல்.

அருளெனுமிலராய்ப்பொருள்வயிற்பிரிவோர் *
பன்னெடுங்காலமும்வாழியர் ... ... ... *
பொன்னெடுந்தேரொடுந்தானையிற்பொலிந்தே.*

இது-சுரிதகம். (சசு)

என - நேரிசையொத்தாழிசைக்கலிப்பா வந்தமைகாண்க.

[௰௪]

தனிச்சொற்றாழிசைதனக்கிடையம்போ ... *
தரங்கமுறமரினம்போதரங்க ... ... *
வொத்தாழிசைக்கலியாமுணர்தரினே ... *

(இதன்பொருள்.)

தனிச்சொல்... தனிச்சொல்லுக்கும் ... ... ... ... *
தாழிசைதனக்கு தாழிசைக்கும் ... ... *
இடை நடுவிலே ... ... ... ... *
அம்போதரங்கமுற அம்போதரங்கமடைந்து ... ....*

வரின் - தரவு-தாழிசை - அம்போதரங்கம்-தனிச்சொல்-சுரிதகம் - ஆகிய வைந்துறுப்போடும்வருவது.

அம்போதரங்கவொத்தாழிசைக்கலியாம் - அம்போதரங்கவொத்தாழிசைக்கலிப்பாவாகும் ... ... ... ... ... *

உதாரணம்.

கெடலருமாமுனிவர்கிளர்ந்துடன்றொழுதேத்தக் . *
கடல்கெழுகனைசுடரிற்கலந்தொளிரும்வாலுளைய *
அழலவிர்சுழல்செங்கணரிமாவாய்மலைந்தானைத்... *
தாரொடுமுடிபிதிரத்தமனியப்பொடிபொங்க ... *
வார்புனலிழிகுருதியகலிடமுடனனைப்பக் ... ... *
கூருகிரான்மார்பிடந்தகொலைமலிதடக்கையோய்...*

இது-தரவு.

முரசதிர்வியன்மதுரைமுழுவதுந்தலைபணிப்பப் ... *
புரைதொடித்திரடிண்டோட்போர்மலைந்தமறமல்ல ...*
ரடியொடுமுடியிறுப்புண்டயர்ந்தவர்நிலஞ்சேரப் ... *
பொடியெழவெங்களத்துப்புடைத்ததுநின்புகழாமோ *

கலியொலிவியனுலகங்கலந்துடனனிநடுங்க... ... ...*
வலியியலவிராழிமாறெதிர்ந்தமருட்சோர்வு ... ... *
மாறுதாருடம்பொடுமறம்பிதிரவெகிர்கலங்கிச்... ...*
சேணுயரிருவிசும்பிற்செகுத்ததுநின்சினமாமோ...... *

படுமணியின்னிரைகள்பரந்துடனிரிந்தோடக் ... ... *
கடுமுரணெதிர்மலைந்தகாரொலியெழிலேறு ... *

வெரிநெடுமேருப்பொசியவீழ்ந்துதிறம்வேறாக ... ✲
எறுமலிபெருந்தொழுவினிறுத்ததுன்னிகலாமோ ... ✲

இவை-மூன்றுந்தாழிசை.

இலங்கொளிமரகதமெழின்மிகுவியன்கடல்... ... ✲
வலம்புரித்தடக்கைமாஅனின்னிறம் ... ... ✲
விரியிணர்க்கோங்கமும்வெந்தெரிபசும்பொனும் ✲
பொருகளிறட்டோய்புரையுநின்னுடை ... ... ✲

இது-பேரெண்.

கண்கவர்கதிர்முடிகனலுஞ்சென்னியைத் ...✲
தண்சுடருறுபகைதவிர்த்தவாழியை ... ...✲
யொலியியலுவணமோங்கியகொடியினை ... ✲
வலிமிகுசகடமாற்றியவடியிணை ... ... ✲

இது-அளவெண்.

போரவுணர்க்கடந்தோய்நீ ... ... ... ✲
புணர்மருதம்பிளந்தோய்நீ ... ... ... ✲
நீர்கலமளந்தோய்நீ ... ... ... ... ✲
நிழறிகழும்படையோய்நீ ... ... ... ✲

இது-இடையெண்.

ஊழிநீ - யுலகுநீ - யுருவுநீ - யருவுநீ ... ...✲
யாழிநீ - யருளுநீ - யறமுநீ - மறமுநீ ... ✲

இது- சிற்றெண் - அம்போதரங்கம்.

எனவாங்கு.

இது-தனிச்சொல்.

அடுதிறலொருவநிற்பரவுதுமெங்கோன் ... ...✲
றொடுகழற்கொழும்பூட்பகட்டெழின்மார்பிற் ... ✲
கயலொடுகலந்தசிலையுடைக்கொடுவரிப் - ... ... ✲
புயலுறழ்தடக்கைப்போர்வேலச்சுதன் ... ....✲
றொன்றுமுதிர்கடலுலக ... ... ... ... ✲
மொன்றுபுரிதிகிரியுருட்டுவோனெனவே. ... ✲

இது - சுரிதகம்.

என-அம்போதரங்கவொத்தாழிசைக்கலிப்பாவந்தவாகாண்க.

எல்லை.

தரவொன்றுதாழிசைமூன்றுதனிச்சொற்சுரிதகமா ... ... *
நிரலொன்றினேரிசையொத்தாழிசைக்கலிநீர்த்திரைபோன்... *
மரபொன்றினேரடிமுச்சீர்குறணடுவேமடுப்பி ... ... ...*
ணரவொன்றுமலர்குலதம்போதரங்கவொத்தாழிசையே ... *

என்றூராகலின்.

அறைந்தவவயவத்தோடராகமுமுறல்... ...*
வண்ணகமெனப்பெயர்வைக்கப்படுமே ... *

இதன்பொருள்.

அறைந்த ... ... ... மேற்கூறிப்போந்த
அவயவத்தோடு... ... ஐந்தவயவத்தோடு,
அராகமுமுறல் ... ...அராகவுறுப்புங்கூடி

தரவு-தாழிசை-அராகம்-அம்போதரங்கம்-தனிச்சொல்-சுரிதகமெனும்.ஆறுறுப்போடும்வருவது.

வண்ணகம்-வண்ணகவொத்தாழிசைக்கலிப்பாவாகும்.

உதாரணம்.

விளங்குமணிப்பசும்பொன்னின் விசித்தமைத்துக்கதிர்கான்று *
துளங்குமணிக்கனைகழற்காற்றுறுமலர்நறும்பைந்தார் . ... *

பரூஉத்தடக்கைமதவானைப்பணையெருத்தின்மிசைத்தோன்றுங்
குரூஉக்கொண்டமணிப்பூணோய்க்குறையிரந்துமுந்நாட்கண் .*

மாயாதவனப்பினையாய்மகிழ்வார்க்குமல்லார்க்குந் ... ... *
தாயாகித்தலையளிக்குந்தண்டுறையூர்கேள் ... ... ... *

இது-தரவு.

காட்சியாற்கலப்பெய்தியெத்திறத்துங்கதிர்ப்பாகி ......*
மாட்சியார்க்கறியாதமாபொத்தாய்கரவினுற் ... ......*
பிணிநலம்பெரிதெய்திப்பெருந்தடந்தோள்வனப்பழிய *
வணிநலந்தனியேவந்தருளுவதுமருளாமோ .........*

அன்பினலமிழ்தளை இயறிவினூற்பிறிதின்றிப்... ... ... *
பொன்புனைபூணைகம்பசப்பெய்தப் பொழிலிடத்துப்... ...*
பெருவரைத்தோளருளுதற்கிருளுடைத்தமியையாய்க். ... ...*
கருவரைத்தோள்கதிர்ப்பிக்குங்காதலுங்காதலோ ... ...*

பாங்கனையேவாயிலாப்பல்காலும்வந்தொழுகுந்................*
தேங்காதகாவினையுந்தெளியாதவிருளிடைக்கட்................*
குடவரைவேய்த்தோளிணைகள்குளிர்ப்பிப்பான் றமியையாய்த்*
தடமலர்த்தாரருளுநின்றகுதியுந்தகுதியோ... ... ... *

இவை-மூன்றுந்தாழிசை.

தாதுறுமுறிசெறிதடமலரிடையிடைதழலெனவிரிவனபொழில்.
போதுறுநறுவிரைபுதுமலர்தெரிதருகருநெய்தல்விரிவனகழி*
தீதுறுதிறமறுகெனநனிமுனிவனதுணையொடுபிணைவனதுறை..
மூதுறுமொழிகளிநுரைதருதிரையொடுகெடிதொடர் புடையதுக
[டல்.

இஃது-அராகம்.

கொடுந்திறலுடையனசுறவேறுகோட்பதனு ... *
விடுங்கழியிராவருதல்வேண்டாவென்றிசைத்திலமோ
கருந்திறத்துறுதொழிற்காரம்பெரிதுடைமையா... *
விருணிறத்தொருகானிவிராவாரலென்றிலமோ ... *

இது-பேரெண்.

நாணொடுகழிந்தன்றாற்பெண்ணைசிநலத்தகையே ... *
துஞ்சலுமொழிந்தன்றாற்றொடித்தோளிதடங்கண்ணே...*
அரற்றொடுகழிந்தன்றலாரிருளுமாயிழைக்கே. ... ... *
நயப்பொடுகழிந்தன்றானவது நன்னுதற்கே ... ...*

இஃது-அளவெண்.

அத்திறத்ாலசைந்தனதோளலர்தற்குமெலிந்தனகண் ........*
பொய்த்துரையாற்புலர்ந்ததுமுகம் பொன்னிறத்தாற்போர்த்த
[னமுலை.
அழலினலசைந்ததுநகையணியினலொசிந்ததிடை...... ... *
குழலினனிமிர்ந்ததுமுடிகுறையினற்கோடிற்றுநிறை........*

இது - இடையெண்.

உட்கொண்டநகைத்தொருபா லுல்கறிந்சவலத்தொருபால்.... ✻
கட்கொண்டறுளித்தொருபால்கழிவெய்தும்படிற்றொருபால் ✻
பரிவுறூஉந்தகைத்தொருபால்படிவுறூஉம்பசப்பொருபால், ✻
இரவுறூஉந்துயரொருபாலிளிவந்தவெளிற்றொருபான் ... ...✻
மெலிவுறூஉந்தகையொருபால்விளர்ப்புவந்தடைந்தொருபால்.✻
பொலிவுசென்றகன்றொருபால்பொறைவந்துகூர்ந்தொருபால் ✻
காதலிற்கதிர்ப்பொருபால்கட்படாத்துயரொருபால் .........✻
ஏதில்சென்றணைந்தொருபாலியனுணிற்செறிவொருபால்......✻

இது-சிற்றெண்-அம்போதரங்கம்.

எனவாங்கு.

தனிச்சொல்.

இன்னதிவ்வழக்கமித்திறமிவணல ... ...✻
மென்னவுமுன்னூட்டுன்னுயாகிக் ... ... ✻
கலந்தவணிலைமையாயினுநலந்தக் ... ...✻
கிளையொடுகெழீஇயதழைய விழ்கோதையைக்.
கற்பொடுகாணியம்யாமே ... ... ... ✻
பொற்பொடுபொலிகநும்புணர்ச்சிதானே ✻

சுரிதகம்.

வண்ணகவொத்தாழிசைக்கலிப்பா வந்தமைகாண்க.

(௬௮)

கலித்தளைதட்டுக்கலிபொலிதழுவியும் ... ... ... ✻
வெண்டளைதட்டுவெள்ளொலிதழுவியும் ... ... ✻
வருவதுவெண்கலியாம்வழுத்திடினே ... ... ✻

இதன்பொருள்.

கலித்தளைதட்டு ... கலித்தளைவிரவி ... ... ...✻
கலியொலிதழுவியும் கலியோசையைத்தழுவியும் ✻
வெண்டளைதட்டு ... வெண்டளைவிரவி ... ...✻
வெள்ளொலிதழுவியும்-வெள்ளோசையைவிரவியும்✻
வருவது ... வருவது ... ... ... ✻
வெண்கலியாம் ... வெண்கலிப்பாவாகும் ... ✻

உதாரணம்.

வாளார்ந்தமழைத்தடங்கண்வனமுலைமேல்வம்பனுங்கக் ... ...*
கோளார்ந்தபூணுகைக்குழைபுரளக்கோட்டெருத்தின் ... ... *
மாலைதாழ்கூர்ந்தலார்வரன்முறையான்வந்தேத்தச் ... ... *
சோலை தாழ்பிண்டிக்கீழ்ச்சூழ்ந்தவர்தஞ்சொன்முறையான் ...*
மனையறமுந் துறவறமு மண்ணவர்க்கும்விண்ணவர்க்கும் ... *
வினையறுக்கும்வகைதெரிந்துவீடொடுகட்டிவையுரைத்த ... *
தொன்மைசால்கழிகுணத்தேந்துறவரசைத்தொழுதேத்த ...*
நன்மைசால்வீடெய்துமா ... ... ... ... ... ...*

என - வெண்கலிப்பாவந்தவாகாண்க.

(௪௧)

என்னை.

அசையடிமுன்னராகம்வந்தெல்லாவுறுப்புமுண்டேல் ... ...*
வசையறுவண்ணகவொத்தாழிசைக்கலிவான்றனிதட் ....... ...*
டிசைத்தனதாகியும்வெண்பாவியைந்துமின்பரன்மொழியாய். *
விசையறுசிந்தடியாலிறுமாய்விடின்வெண்கலியே ... ...... *

என்றாராகலின்.

தரவேதரவிணைதாழிசைசிலபல ... ... ... *
மரபேயியன்றுமயங்கியும்வருவது ... ... *
கொச்சகக்கலியெனக்கூறப்படுமே ... ...*

இதன்பொருள்.

தரவு ... ஒருதரவும் ... ... ... ...*
தரவிணை ... இருதரவும் ... ... ... *
தாழிசைசில ... சிலசிலதாழிசையும் ... *
தாழிசைபல ... பலபலதாழிசையும் ... ... *
மரபேயியன்றும் இம்முறையேவருவதும் *
மயங்கியும்வருவது-மயங்கிவருவதும் ... *
கொச்சகக்கலி - கொச்சகக்கலியாகும் ... *

இவற்றுள்,

தரவொன்றுவருவது - தரவுக்கொச்சகக்கலிப்பாவெனவும் ...*
தரவிரண்டுவருவது - தரவிணைக்கொச்சகக்கலிப்பாவெனவும் *

சில்தாழிசைவருவது-சிஃறுழிசைக்கொச்சகக்கலிப்பாவெனவும் பலதாழிசைவருவது-பஃறுழிசைக்கொச்சகக்கலிப்பாவெனவும் மயங்கிவருவது-மயங்கிசைக்கொச்சகக்கலிப்பாவெனவும்பெயர் [பெறும்.

(உதாரணம்)

செல்வப்போர்க்கதக்கண்ணன்செயிர்த்தெறிந்தசினவாளி ... *
முல்லைத்தார்மறமன்னர்முடித்தலையைமுருக்கிப்போ ... ...*
யெல்லைநீர்வியன்கொண்மூவிடைநுழைமதியம்போன் ... *
மல்லலோங்கெழில்யானை மருமம்பாய்ந்தொளித்ததே ... *

எனத்-தரவுகொச்சகக்கலிப்பாவும்.

வடிவுடைநெடுமுடிவானவர்க்கும்வெலற்கரிய ... *
கடிபடுநறுப்பைந்தார்க்காவலர்க்குக் காவலனும்... *
கொடிபடுமணிமாடக்கூடலார்கோமானே ... *

தரவு.

எனவாங்கு.

தனிச்சொல்.

துணைவளைத்தோளிவண்மெலியத் தொன்னலந்தொடர்ப்புண்டா
கிணைமலர்த்தாரருளுமேலிதுவிதற்கோர்கைம்மாறென் [ந்
றுணைமலர்த்தார்தடக்கண்ணுர் துணையாகக்கருதாரோ ... ...*

தரவு.

அதனால்,

தனிச்சொல்.

செவ்வாய்ப்பேதையிவடிறத் ... ... ...*
தெவ்வாறுங்கொலிஃதெண்ணியவாறே ... *

எனத்-தரவிணைக்கொச்சகக்கலிப்பாவும்.

பருஉத்தடக்கைமதவானைப்பணையெருத்தில் மிசைத்தோன்றிக் *
குருஉக்கொண்ட வெண்குடைக்கீழ்க்குடைமன்னர்புடைசூழப் *
படைப்பரிமான்றேரினொடும்பரந்துலவுமறுகினிடைக் ... *
கொடித்தானையிடைப்பொலிந்தான்கூடலார்கோமானே. ... *

இது-தரவு.

ஆங்கொருசார்.

உச்சியார்க்கிறைவனாயுலகமெல்லாங்காத்தளிக்கும்... ... *
பச்சையார்மணிப்பைம்பூட்புரந்தரனைப்பாவித்தார்... ...*,
வச்சிரங்காணுதகாரணத்தான்மயங்கினரோ... ... ... ...*

ஆங்கொருசார்.

அக்காலமணிநிரைகாத்தருவரையாற்பனிதவிர்த்து ... ...*
வக்கிரனைவடிவழித்தமாயவனைப்பாவித்தார் ... ... ... ... *
சக்கரங்காணுதகாரணத்தாற்சமழ்த்தனரோ ... ... ...*

ஆங்கொருசார்.

மால்கொண்டபகைதணிப்பான்மாத்தடிந்துமயங்காச்செங்...*
கோல்கொண்டசேவலங்கொடியவனைப்பாவித்தார்...... ......*
வேல்கொண்டதின்மையால்விம்மிதராய்நின்றனரோ... ... ...*

இவை-மூன்றுந்தாழிசை.

அஃதான்று.

இது-தனிச்சொல்.

கொடித்தேரண்ணல்கொற்கைக்கோமா ... *
னின்புகழொருவன்செம்பூட்சேஎ... ... ...*
யென்றுநனியறிந்தனர்பலரேதானு ... ... *
மைவருளொருவனென்றறியலாகா ... ... *
மைவரையானைமடங்காவென்றி ... ... *
மன்னவன்வாழியென்றேத்தத் ... ... *
தென்னவன்வாழி திருவொடும்பொலிந்தே...*

எனச்-சிஃறாழிசைக்கொச்சகக்கலிப்பாவும்.

தண்மதியேர்முகத்தாளைத்தணியிடத்துநனிகண்டாங்... ... *
குண்மதியுமுடைநிறையுமுடன்றளரமுந்நாட்கட் ... ...*
கண்மதியொப்பிவையின்றிக்காரிகையை நிறைகவர்ந்து *
பெண்மதியின்மகிழ்ந்தநின்பேரருளும்பிறிதாமோ... ...*

இது-தரவு.

இளநலமிவள்வாடவிரும்பொருட்குப்பிரிவாயேல் … ……*
தளநலமுலைகவெண்பற்றாற்குழற்றளர்வாளோ … … ……*

தகைநலமிவள்வாடத்தரும்பொருட்குப்பிரிவாயேல் ………*
வகைநலமிவள்வாடிவருந்தியில்லிருப்பாளோ … … ……*

அணிநலமிவள்வாடவரும்பொருட்குப்பிரிவாயேல்- ………*
மணிநலமகிழ்மேனிமாமைசாடுமேடிவாளோ … … …*

நாம்பிரியேமினியென்றுநறுநுகலைப்பிரிவாயேல் … …*
ஓம்பிரியோமெனவுரைத்தவுபர்மொழியும்பழுதாமோ ………*

குன்றளித்ததிரடோளாய்கொய்புனத்திற்கூடியநாள் … … …*
அன்றளித்தவருண்மொழிபாலருளுவதுமருளாமோ … ……*

சிலபகலூடியக்கார்சிலம்பொலிச்சீறடிபரவிப் …………*
பலபகலுந்தலையளித்தபணிமொழியும்பழுதாமோ… ………*

இவையாறும் - தாழிசை.

எனவாங்கு.

தனிச்சொல்.

அரும்பெறலிவளினுந்தரும்பொருளதனினும் … *
பெரும்பெறலரியனவெறுக்கையுமற்றே … … *
யதனால்விழுமியதறிமதிவாழி … … … … …*
கெழுமியகாதலிற்றரும்பொருள்சிறிதே … … *

சுரிதகம்.

என-பஃறாழிசைக்கொச்சகக்கலிப்பாவும்.

மணிகிளர்நெடுமுடிமாயவனுந்தம்முனும்போன் … …*
றணிகிளர்நெடுங்கடலுங்கானலுந்தோன்றுமால் …. … *
றுணைநிவந்தலையன்னநொய்ப்பறையசிறையன்ன. … *
பிணைநபந்திணைகூருமேமஞ்சார்துறைவகேள் … *

மலையெனமழையெனமஞ்செனத்திணைபொங்கிக் … …*
கனலெனக்காற்றெனக்கடிதுவந்திசைபயிறும் … *

விழுமியோர்வெகுளிபோல்வேலாழியிறக்கலா ... *
தெழுமுந்நீர்பரந்தொழுகுமேமஞ்சார்துறைவகேள் ... *

இவை யிரண்டும் - தரவு.

கொடிபுரையுநுழைநுசுப்பிற்குழைக்கமர்ந்த திருமுகத்தோள் *
தொடிநெகிழ்ந்ததோள்கண்டுந்துறவலனேயென்றியால் ......*

கண்கவருமணிப்பைம்பூட்கயில்கவையசிறுபுறத்தோள் ......*
தெண்பனிநீருகக்கண்டுந்தெரியலனேயென்றியால் ............*

நீர்பூத்தநிரையிதழக்கணின்றேசிந்தபுருவத்தோள் ......... *
பீர்பூத்தநுதல்கண்டும்பிரியலனேயென்றியால் ......... *

கனைவரலாற்றிருகணைபோற்கைந்நில்லாதுண்ணெகிழ்ந்து. ...*
நினையுமென்னிலைகண்டுநீங்கலனேயென்றியால் ......... ...*

வீழ்சுடரினெய்யேபோல்விழுமநோய்பொறுக்கல்லாத் ......*
தாழுமென்னிலைகண்டுந்தாங்கலனேயென்றியால் ... .........*

கலங்கவிழ்ந்தநாயகன்போற்களைதுணைபிறிதின்றிப் ......... *
புலம்புமென்னிலைகண்டும்போகலனேயென்றியால் ......... *

இவை- தாழிசை.

அதனால்,

தனிச்சொல்.

அடும்பயிலிறும்பினெடும்பணைமிலைசதொறுங் ... *
கொடும்புறமடலிடையொடுங்கினகுருகு ... *

செறிதருசெருவிடைபெறிதொழிலிளையவர் ... *
நெறிதருபுரவியின்மறிதருந்திமில் ... ... *

அரசுடைநிரைபடைவினைசெறிமுரசென ... *
நுரைவருதிரையொடுகரைபொருகடல் ... ...*

அலங்கொளிபவிர்சுடரிலங்கொளிமலர்தொறும் ...*
கலந்தெறிகாலொடுபுலம்பினபொழில் ... ... ... *

இது - அராகம்,

விடாதுஅஃதுகலுழுமென்வெள்வளையுந்தவிர்ப்பாய்மன் ... *
கெடாஅதுபெருகுமென்கேண்மையுநிறுப்பாயோ ... ...*

ஒல்லாதுகழலுமென்னொளிவளையுஞ்செறிப்பாய்மன் ... ...*
றில்லாதுபெருகுமென்னெஞ்சமுதிருப்பாயோ ... ... *

மறவாதவன்பினேன்மனநிற்குமாறுரையாய் ... ... ... *
துறவாததமருடையேன்றுயர்தீருமாறுரையாய் ... ... ... *

காதலார்மார்பின்றிக்காமக்குமருந்துரையா ... ... ... ... *
யேதிலார்தலைசாயயானுய்யுமாறுரையாய் ... ... ... ... ...*

இணைபிரிந்தார்மார்பின்றியின்பக்குமருந்துரையாய் ... ... *
துணைபிரிந்ததமருடையேன்றுயர்தீருமாறுரையாய் ... ... *

இவை - தாழிசை.

எனவாங்கு.

தனிச்சொல்.

பகைபோன்றதுதுறைபரிவாயினகுறி ......*
நகையிழந்ததுமுகநனிநாணிற்றுளம் ...... *
தகையிழந்தனதோள்தலைசிறந்ததுதுயர் ... *
புகைபரந்ததுமெய்புரையாயிற்றென்னுயிர் *

இது - அம்போதரங்கம்

அதனால்

தனிச்சொல்.

இனையதுநினையாவனைபதுபொழுதா ... ... *
னினையலவாழிதோழிதொலையாப் ... ... *
பனியொடுகழிகவுண்கண் ... ... ... ... *
என்னொடுகழிகவித்துன்னியநோயே ... ..*

இது - சுரிதகம்.

மயங்கிசைக்கொச்சகக்கலிப்பாவும் வந்தமை காண்க.

(௫௰)

என்னை

தரவேதரவிணைதாழிசை தாமுஞ்சிலபலவாய் ... ... ...*
மரபேயியன்றுமயங்கியும் வந்தனவாங்கமைத்தோ ... ... *

ஏரவேரல்கலல்குலம்பேர்நெடுங்கண்வம்பேறுசொங்கைக்... *
குரவேகமழ்குழலாய்கொண்டவான் பெயர் கொச்சகமே.... *
எஃறாராகலின்.

இரண்டடிமுதற்பலவடிவந்தீற்றடி ... *
மிக்கேணையவடியொன்றியொஃறுதும் ... *
வருவதுகலித்தாழிசையாகும்மே ... ... *

இதன்பொருள்.

| | | |
|---|---|---|
| இரண்டடிமுதல் ... | இரண்டடிமுதலாக ... | * |
| பலவடிவந்து ... | பலவடியாகவந்து ... | * |
| ஈற்றடிமிக்கு | இறுதியடிமிகுந்து ... | * |
| ஏனையவடி ... | மற்றையவடிகள் ... ... | * |
| ஒன்றியொன்றுதும் | ஒன்றியுமொன்றுதும் ... | * |
| வருவது ... | வருவது ... ... ... | * |
| கலித்தாழிசையாகும் | கலித்தாழிசையாகும். ... | * |

உதாரணம்.

வாள்வரிவேங்கைவழங்குஞ்சிறுநெறியெங்...*
கேள்வரும்போதினெழால்வாழிவெண்டிங்காள்.
கேள்வரும்போதினெழாலாய்க்குறுலியரோ *
நீள்வரிநாகத்தெயிறேவாழிவெண்டிங்காள் ...*
எனக்கலித்தாழிசைவந்தமைகாண்க.

(ருக)

அடுக்கிவருதலேயதன்சிறப்பாகும்.

இதன்பொருள்.

அடுக்கிவருதல்- ஒருபொருண்மேன்மூன்றடுக்கிவருவதும்.
அதன்சிறப்பாகும் - அத்தாழிசையின்சிறப்பாகும் , ... *

உதாரணம்.

கொய்தினைக்காத்துங்குழவியடுக்கத்தெம் ... ... *
பொய்தற்சிறுகுடிவாரனீயையநலம்வேண்டின் ... *
ஆய்தினைக்காத்துமருவியடுக்கத்தெம் ... ... ... *
மாசில்சிறுகுடிவாரனீயையநலம்வேண்டின் ... ...*
மென்றினைக்காத்துமிகுபூங்கமழ்சோலைக் ... ... *
குன்றச்சிறுகுடிவாரனீயையநலம்வேண்டின் ... *
என-ஒருபொருண்மேன்மூன்றடுக்கி கலித்தாழிசை
வந்தமைகாண்க. (ருஉ)

நெடிலடி நான்காய் நிகழ்வது கலித்துறை ... ... *

(இதன் பொருள்.)

நெடிலடி ... ... ஐஞ்சீரடி ... ... *
நான்காய் நிகழ்வது ... ... நான்காகவருவது *
கலித்துறை ... கலித்துறையாகும்.

உதாரணம்.

அன்னங் கண்படு தண்பணை நீடத நாடளிக்கும் ... ... *
மன்னர் மன்னவன் மண்டமர்க் கடந்த வொள்வேலின் ... ... *
மின்னியாங்கவன் முரசெனவிண்ணிடையதிர்ந்து ... ... *
பொன்னங்குன்றின் மேலவன் கொடைபோன் மெனப்பொழிந்த.
எனக்கலித்துறை வந்தமை காண்க.

(௫௩)

அளவடி நான்காய் வரல் கலிவிருத்த ... ... *
மாகுமென்மனார் நிந்திசினோரே ... ... *

இதன் பொருள்.

அளவடி ... ... ... நாற்சீரடி ... ... ... *
நான்காய்வரல் ... நான்காகவருவது ... ... *
கலிவிருத்தமாகும் ... கலிவிருத்தமாகும் ... ... *

உதாரணம்,

நீறணிந்த கடவுணிறத்தவா ... ... *
ஞறணிந்து சென்றார் கலிமேய்ந்தகிற் ... *
சேறணிந்த முலைத் திருமங்கைதன் ... *
வீறணிந்தவன் மேனியின் மீண்டவே ... *

என - கலிவிருத்தம் வந்தமை காண்க.

(௫௪)

என்னை.

அடிவரையின்றியளவொத்து மந்தடி நீண்டிசைப்பிற் ... *
கடிதலில்லாக் கலித்தாழிசையாகுங் கலித்துறையே. ... *
நெடிலடி நான்காய் நிகழ்வது நேரடியீரிரண்டாய் ... ... *
விடினதுவாகும் விருத்தந் திருத்தகு மெல்லியலே ... ... *
என்றாராகலின்.

வஞ்சிப்பா.

பெரும்பாலுந்தன்றளையுஞ்சிறுபான்மை பிறதளையுந் தழுவி யிருசீரடியாலேனு முச்சீரடியாலேனு மூன்று முதலியபலவடிகளைக்கொண்டுதனிச்சொற்பெற்று அகவற் சுரிதகத்தான்முடியும் ... ... ... ... ... .... ... ... ... *

ஆய்ந்ததனிச்சொலினகவலினிறுவது ... *
வஞ்சிப்பாவெனவழுத்தப்படுமே ... *

இச்சூத்திரமென்னுதலிற்றோவெனின்.

குறளடிவஞ்சிப்பாவும் - சிந்தடிவஞ்சிப்பாவும் - வஞ்சித்தாழிசையும் - வஞ்சித்துறையும் - வஞ்சிவிருத்தமுமுணர்த்துவான்றொடங்கி - வஞ்சிப்பாவிற் கீறுமாறுணர்த்துதனுதலிற்று...

இதன்பொருள்.

ஆய்ந்த - ஆராய்ந்த ... ... ... *
தனிச்சொலின் தனிச்சொற்பெற்று ... *
அகவலினிறுவது ஆசிரியச்சுரிதகத்தால் வருவது.
வஞ்சிப்பா வஞ்சிப்பாவாகும் ... ... *

உதாரணம்.

பூந்தாமரைப் போதலமரத் - - - - *
தேம்புனலிடை மீன்றிரிதரும் ... *
வளவயலிடைக் களவயினமகிழ் ... ... *
வினைக்கம்பலை மனைச்சிலம்பவு ... ... *
மனைச்சிலம்பிய மணமுரசொலி ... ... *
வயற்கம்பலைக் கயலார்ப்பவு ... ... *

நாளும்.

மகிழுமகிழ்தூஉங்கூரன் ... ... *
புகழ்தலானுப்பெருவண்மையனே ... *

எனக்குறளடிவஞ்சிப்பாவும்.

கொடிவாலனகுருநிறத்தனகுறுந்தாளன ... *
வடிவாளெயிற்றழலுளையனவள்ளுகிரன ... ... *

பணையெருத்தினிணையரிமானணையேறித் ... ... *
துணையில்லாத்துறவுநெறிக்கிறைவனாகி ... ... *
யெயினடுவணினிதிருந்தெல்லோர்க்கும் ... ... *
பயில்படுவினைபத்திமையிற்செப்பினோன் ... *

புணையெனத்

திருவுறுதிருந்தடிதிசைதொழ ... ... *
விரிவுறுநாற்கதிவீடுநனியெளிதே ... ... *
எனச்சிந்தடிவஞ்சிப்பாவும்வந்தலைகாண்க.

(ருரு)

இருசீரடிநான்மையினொருபொருண்மே ... ... *
லொருமூன்றடுக்கிநின்றொழுகுதல்வஞ்சித் ... *
தாழிசையாந்தனிவரிற்றுறையெனலே ... ... *

இதன்பொருள்.

இருசீரடிநான்மையின் - இருசீரடிநான்காக ... *
ஒருபொருண்மேல் - ஒருபொருளின்மேல் ... *
ஒருமூன்றடுக்கி - மூன்றடுக்கி ... ... *
நின்றொழுகுதல் - நின்றுவருவது ... *
வஞ்சித்தாழிசையாம் - வஞ்சித்தாழிசையாகும் ... *
தனிவரில் - இருசீரடிநான்காகத் தனித்துவரில்
துறை - வஞ்சித்துறையாகும் ... *

உதாரணம்.

மடப்பிடியைமதவேழந் ... ... *
தடக்கையான்வெயின்மறைக்கும் ... *
இடைச்சுரமிறந்தார்க்கே ... ... *
நடக்குமென்மனனேகாண் ... ... *

பேடையையிரும்போத்துத் ... *
தோகையான்வெயின்மறைக்கும் ... *
காடகமிறந்தார்க்கே ... ... *
யோடுமென்மனனேகாண் ... *

இரும்பிடிபைமதவேழம் ... ✻
பெருங்கையான்வெயின்மறைக்கும் ... ✻
அருஞ்சுரமிறந்தார்க்கே ... ... ✻
விரும்புமென்மனனேகாண் ... ... ✻

எனவஞ்சித்தாழிசையும்.

மைசிறந்தன மணிவரை.............. ✻
கைசிறந்தன காந்தளும்.............. ✻
பொய்சிறந்தனர் காதலர்.................... ✻
மெய்சிறந்திலர் விளங்கிழாய்... ......... ✻

என-வஞ்சித்துறையும்வந்தமைகாண்க.

(௫௬)

சிந்தடிநான்மையிற் செல்லுதல்வஞ்சி... ......... ✻
விருத்தமென்மனர் மெய்யுணர்ந்தோரே............ ✻

இதன்பொருள்.

சிந்தடிநான்மையில்.....முச்சீரடிநான்காக ✻
செல்லுதல்.............வருவது............ ✻
வஞ்சிவிருத்தம்... ......வஞ்சி விருத்தமாகும்.

உதாரணம்.

சோலையார்ந்தசுரத்திடைக்... ... ............ ✻
காலையார்கழலார்ப்பவு.......... ............ ✻
மாலைமார்பன் வருமாயினே................. ✻
நீலவுண்கணிவள்வாழுமே... ...... ......... ✻

என-வஞ்சிவிருத்தம்வந்தமைகாண்க.

(௫௭)

என்னை.

குறளடிநான்கினமூன்றொருதாழிசைகோதில்வஞ்சித் ... ✻
துறையொருவாது தனிவருமாய்விடிற்சிந்தடிநான் ... ✻
கறைதருகாலையமுதேவிருக்தந்தனிச்சொல்வந்து ... ✻
மறைதலில்வாரத்தினுலிறும்வஞ்சிவஞ்சிக்கொடியே ... ✻

என்றாராகலின்.

(௫௮)

ஆதியில்வெண்பா வகவலிறுதி... ......... ※
யாய்வருவதுமருட்பாவாகும்மே.......... ※

இதன்பொருள்.

ஆதியில்வெண்பா - முதலில்வெண்பாவும் ... ... ※
அகவலிறுதி ........இறுதியிலாசிரியப்பாவும்... ※
ஆய்வருவது.........ஆகவருவது... ... ......... ※
மருட்பாவாகும்.....மருட்பாவாகும்............ ※

உதாரணம்.

தென்றலிடைபோழ்ந்துதேனார்நறுமுல்லை ... ※
முன்றின்முகைவிரியுமுத்தநீர்த்தண்கோளூர்க் ... ※
குன்றமர்ந்தகொல்லேற்றணிற்புறங்காப்ப ... ... ※
வென்றுந்திராநண்பிற்றேவர்... ... ... ... ※

சீர்சால்செல்வமொடுபொலிமதிசிறந்தே.

(௫அ)

என்னை.

பண்பார்புறநிலைபாங்குடைக்கைக்கிளைவாயுறைவாழ்த்.........※
தொண்பாச்செவியறிவென்றிப் பொருண்மிசை யூனமில்லா. ※
வெண்பாமுதல்வந்தகவல்பின்றகவிளையுமென்றல். ... ......※
வண்பான்மொழிமடவாய்மருட்பாவெனும்வையகமே.. ......※

என்றாராகலின்.

செய்யுளியன்முற்றும்.





௨

மூன்றாவது

# ஒழிபியல்.

—

தளையுஞ்சீருந்தபவரிற்குறுகிய............... ※
இ உ ஐ யு மிசைபெறு வென்ப............... ※

இவ்வியலென்ன பெயர்த்தோவெனின்,

உறுப்பிய லுள்ளும்- செய்யுளிய லுள்ளும்-சொல்லாதொழிந்தவைகளையுணர்த்தினமையால் ஒழிபியலென்னும்பெயர்த்து இவ்விய லுள் இச்சூத்திர மென்னுதலிற்றோவெனின்,ஒருசாரெழுத்துகட்கெய்தியதோரிலக்கணமுணர்த்துதனுதலிற்று......... ※

இதன்பொருள்.

தளையும் - சீரும் ... தளையும்-சீரும் ... ※
தபவரின்... ...... கெடவரின் ... ... ※
குறுகிய-இ.......... குற்றியலுகரமும் ... ... ※
குறுகிய-உ.......... குற்றியலுகரமும் ... ※
குறுகிய-ஐ......... ஐகாரக்குறுக்கமும் ... ※
இசைபெறு....... அலகுகாரியம்பெறு. ... ... ※

உதாரணம்.

சிறுநன்றியின்றிவர்க்கியாஞ்செய்தக்கானளைப் ... ※
பெறுநன்றிபின்னும்பெரிதன் - றுறுநன்றி ... ... ※
தானவாய்ச்செய்வதுந்தர்மமன்றென்பவே... ... ※
வானவாமுள்ளத்தவர்............................. ※

இதனுள்-இன்றிவர்கியாம்-என்புழி.

குற்றியலிகரமும்.

கொன்றுகொடுநீடுகுருதிபாயவும் ... ... ...※
சென்றுகொடுநீடுசெழுமலைபொருவன ... ... ※
வென்றுகொடுநீடுவிறல்வேழம் ... ... ... ※
என்றுமூடுநீடுபிடியுளபோலும்... ... ............※

அதனுல்.

இண்டிடையிரவிவணெறிவரின் ... ... *
வண்டுண்கோதையுயிர்வாழலளே............ *

இதனுள்-கொன்றுகொடுநீடு-என்புழி.

குற்றியலுகரமும்,

அன்னையையாஞேவதவமாலணியிழாய் ... *
புன்னையையாஞேவன்புலந்து ... ... *

இதனுள்-அன்னையையால்-என்புழி.

ஐகாரக்குறுக்கமுமலகுபெறுமைகாண்க.

(க)

ஆய்தமுமொற்றுமாவியுமளபெழினே........ *
யலகுகாரியமமையாவென்ப.................... *

இதன்பொருள்.

ஆய்தமும் ... ... ஆய்தமும்... ... *
ஒற்றும் ... ... ... மெய்யும் ... ... *
ஆவியும் ... உயிரும் ... ... *
அளபெழின் ... அளபெடுப்புழி ... *
அலகுகாரியமமையார் அலகுகாரியம்பெறு *

உதாரணம்.

எஃஃஃஇலங்கியகையராயின்னுயிர் ... ... *
வெஃஃஃகுவார்க்கில்லைவீடு ... ... ... *

இதனுள்-வெஃஃஃகுவார்க்கில்லை-என்புழி.

ஆய்தமும்,

கண்ண்கருவிளைகார்முல்லை கூரெயிறு... ... *
பொன்ன்பொறிசுணங்குபோழ்வாயிலவம்பூ *
மின்ன்னுழைமருங்குன்மேதகுசாயலாள் ... *
என்ன்பிறமகளாமாறு ... ... ... ... *

இதனுள் - மின்ன்னுழைமருங்குல் - என்புழி.

மெய்யும்,

பல்லுக்குத்தோற்றபனிமுல்லைபைங்கிளிகள் ... ... *
சொல்லுக்குத்தோற்றின்னந்தோன்றினவா- னெல்லுக்கு *
நூறேஒ நூறென்பாணுடைங்கிடைக்குமென்முலைக்கு *
மாறேஒடாலன்றளந்த மண்.... ... ... ... ... *

இதனுள் - நூறேஒ நூறென்பாள் - என்புழி.
உயிரும் அலகுகாரியம்பெறுமைகாண்க.

(௨)

என்னை.

சீருந்தளையுஞ்சிதையிற்சிறிய இஉ அளபோ ... *
டாருமறிவரலகுபெறுமையைகாரநைவே ... *
லோருங்குறிலியலொற்றளபாய்விடினேரலகாம் *
வாரும்வடமுந்திகழுமுகிழ்முலைவாணுதலே ... *

என்றாராகலின்.

விட்டிசைத்தல்லாவிடத்திற்றனிக்குறி ... *
னேரசையாகாவாநிகழ்த்திடினே ... ... *

இச்சூத்திரமென்னுதலிற்றோவெனின்.

ஒருசாரசைகட்கெய்தியதோரிலக்கணம் உணர்த்துதனுதலிற்று.

இதன்பொருள்.

விட்டிசைத்தல்லாவிடத்து ... விட்டிசையாதவழி ... *
தனிக்குறில் ... ... ... தனிக்குற்றெழுத்து ... *
நேரசையாகாவாம் ... ... நேரசையாகாவாம் ... *

உதாரணம்.

உண்ணானொளிநிறானோங்குபுகழ்செய்யான் ... ... ... *
றுன்னருங்கேளிர் துயர்களையான்-கொன்னே..... ... *
வழங்கான்பொருள் காத்திருப்பானேல் அ ஆ ... ... *
விழந்தானென்றெண்ணப்படும்... ... ... ... *

இதனுள் - அ ஆ விழந்தான் - என்புழி.
விட்டிசைத்து நேரசையாயினவாறுகாண்க.

(௩)

நெடிலளபாய்வரி னேர்நேராங்குறி............ ... *
லொடுநெடிலிணைந்தளபாய்வரினிரைநே............*
ராகுமென்மனாரறிந்திசினோரே...... ...... ... *

இதன்பொருள்.

நெடிலளபாய்வரின் ... ... நெட்டெழுத்தளபெடுத்துவரின்...*
நேர்நேர்ஆம்... ... நேரசையும் நேரசையுமாகும் ... *
குறிலொடுநெடிலிணைந்து- குறிலோடுநெடிலிணைந்து ... ...*
அளபாய்வரின்... ... அளபாகவரின் ... ... ... *
நிரைநேராகும்... ... நிரையசையும்நேரசையுமாகும் ... *

உதாரணம்.

ஏஎர்சிதையவழாஅலெழாஅநின்... ... ... *
சேயரிசிந்தியகண் ... ... *

இதனுள் - ஏஎர்சிதைய - என்புழி.

நெடிலளபெடுத்துநேரசையும்-நேரசையும் வழாஅலெழாஅநின் - என்புழி- குறிலொடுநெடிலிணைந்தளபெடுத்து- நிரையசையும்-நேரசையும்-ஆயினவாறுகாண்க. ... ... *

(௪)

என்னை.

விட்டிசைத்தல்லான்முதற்கட்டனிக்குறிநேரசையென் *
றெட்டப்படாதற்குன்றனுதாரணமோசைகுன்று ...*
நெட்டளபாய்விடினேர்நேர் நிரையொடுநேரசையா ... *
மிட்டத்தினற்குறில்சேரினிலக்கியமேர்சிதைவே. ... *

என்றாராகலின்.

நேரீற்றியற்சீரிரண்டுங்கலிக்கியல் ... ... *
பிலவாமியம்புங்காலத்தானே ... ... *

இச்சூத்திரமென்னுதலிற்றோவெனின்- சீரும்- தளையும்- செய்யுளகத்துநிற்பதோர்முறைமையுணர்த்துதனுதலிற்று.

இதன்பொருள்.

நேரீற்றியற்சீரிரண்டும் - நேரசையிறுதியாகிய-தேமா-புளிமா - ஆகிய - ஆசிரியச்சீரிரண்டும் - கலிக்கியல் பிலவாம் - கலிப்பாவினுட்புகப்பெறா ... ... ... ...*

உதாரணம்.

குடைநிலைத்தண்புறவில் - சென்றவாறே-என- தேமா-புளிமா-ஆகிய - இயற்சீரிரண்டும் வராமைகாண்க... ... *

(௬)

நிரைநடுவாகியவஞ்சியுரிச்சீர் ... ... ...*
ரகவலினுங்கலியினுமணுகாவே ... ... *

இதன்பொருள்.

நிரைநடுவாகிய...... } நிரைநடுவாகிய - கருவிளங்கனி கூவிளங்கனியாகிய *
வஞ்சியுரிச்சீர் ... வஞ்சிப்பாவிற்குரியசீரிரண்டும் *
அகவலினும் ... ஆசிரியப்பாவினுள்ளும் ... *
கலியினும் ... ... கலிப்பாவினுள்ளும் ... ... *
அணுகா ... புகப்பெறுவாம் ... ... ... *

உதாரணம்.

நெடுவரைச்சாரற்குறுங்கோட்டுப்பலவின் ... *
விண்டுவார்தீஞ்சுளைவீங்குகவுட்கடுவ ... ... *
னுண்டுசிலம்பேறியோங்கியவிருக்கழைப் ... *
படிகம்பயிற்றுமென்ப ... ... ... *
மடியாக்கொலைவிலென்னையரமலையே ... ... *

இதனுள் - கருவிளங்கனியும்- கூவிளங்கனியும் - செல்வப்போர்க்கதக்கண்ணன் - ஒளித்ததே ... ... ... ... *

இதனுள் - கருவிளங்கனியும் - கூவிளங்கனியும் வராமைகாண்க.

என்னை.

(௭)

மாஞ்சீர்க்லியுட்புகாகலிப்பாவின் விளங்கனிவந் , ... *
தாஞ்சீரடையாவகவகத்துமல்லாதவெல்லாந் ... *
சாஞ்சீர்மயங்குந்தளையுமஃதேவெள்ளைதன்மைகுன்றிப் *
போஞ்சீர்கனிபுகிற்புல்லாதயற்றளை பூங்கொடியே. *

என்றாராகலின்.

அகவலினியற்சீர்வெள்ளடிவஞ்சி ... ... ...*
யடிவெண்பாவடியாகியமூன்று ... ... ...*
மடையவும்பெறூஉமாரயுங்காலே ... *

இதன்பொருள்.

அகவலின் ... ஆசிரியப்பாவினுள் ... *
இயற்சீர்வெள்ளடி - இயற்சீர்வெண்டளையான்வந்தவெண் [பாவடியும்.
வஞ்சியடி ... வஞ்சியடியும்.
வெண்பாவடி ... வெண்சீர்வெண்டளையான் வந்தவெ [ண்பாவடியும்.
ஆகியமூன்றும் ... ஆகியமூன்றடியும்.
அடையவும்பெறும். அடையவும்பெறும் ... *

உதாரணம்.

அங்கண்மதியமரவின்வாய்ப்பட்டெனப் ... *
பூசல்வாயாப்புலம்புமனைக்கலங்கி ... ...*
யேதின்மாக்களுநோவார்தோழி ... ...*

என-இயற்சீர்வெண்டளைவெண்பாவடியும்.

கள்ளிவேய்ந்தமுள்ளியம்புறங்காட்டு ... ... *
வெள்ளில்போகியவியலுளாங்கண் ... ... ...*
உப்பிலாவவிப்புழுக்கல்கைக்கொண்டு ... ... *
பிறர்க்குநோக்காதிழிபிறப்பினோ ... ... ...*
னீயப்பெற்றுநிலங்கலனாக ... ... ... ... *
விலங்குபலிமிசையும் ... ... ... ... ...*
இன்னாவைகல்வாராமுன்னே ... ... ... ...*

என-வஞ்சியடியும்.

எறும்பியளையுட்குறும்பல்சுனைய ... ...*
குறுந்தொடியாஞ்செல்சுரம் ... ... *

என - வெண்சீர் வெண்டளையும் வந்தமைகாண்க.

(எ)

வஞ்சியுளகவலடிகலியடியும் ... ... *
விரவியும்வரப்பெறும்விளம்புங்காலே ... *

இதன்பொருள்.

வஞ்சியுள் ... வஞ்சிப்பாவினுள். ... *
அகவலடியும் — ஆசிரியவடியும் ... ...*
கலியடியும் — கலியடியும் ... ... *
விரவியும்வரப்பெறும் - விரவியும்வரும்...*

உதாரணம்,

பட்டினத்துப்பாலையென்னும் - வஞ்சிநெடும்பாட்டினுள் ...*
ஆசிரியவடியும் - கலியடியும்வந்தமைகாண்க-

(அ)

கலியினுள்வெள்ளையுமகவலுங்கலக்கும் ... ... *

இதன்பொருள்.

கலியினுள் — கலிப்பாவினுள் ... ... ...*
வெள்ளையும் — வெண்பாவடியும் ... ... -*
அகவலும ... ஆசிரியவடியும் ... ... ... *
கலக்கும் -- விரவிவரும்... ... ... ...*

உதாரணம்.

காமர்க்கடும்புனலென்னும் - மயங்கிசைக்கொச்சகக்
கலிப்பாவினுள் - வெண்பாவும் ஆசிரியப்பாவும்
வந்தமைகாண்க.... ... ... ... *

(க)

என்னை.

இயற்றளைவெள்ளடிவஞ்சியின்பாதமகவலுள்ளான் ... *
மயக்கப்படாவல்லவஞ்சிமருங்கினெஞ்சாவகவல்.... ...*
கயற்கணல்லாய்கலிப்பாதமுநண்ணுங்கலியினுள்ளான் *
முயக்கப்படுமுதற்காலிருபாவுமுறைமையினே ... *

என்றாராகலின்.

அருகிக்கலியினுமாசிரியத்தினு ... ... *
மைஞ்சீரடிவருதலுமியல்பாகும் ... ...*
இச்சூத்திரமென்னுதலிற்றோவெனின்.

ஒருசாரடைக்குந்தொடைக்குமெய்தியதோரிலக்கண
முணர்த்துதலுதலிற்று... ... ... ... ...*

இதன்பொருள்.

கலியினும் ... ஒருசார்க்கலிப்பாவினுள்ளும்.*
ஆசிரியத்தினும் - ஆசிரியப்பாவினுள்ளும் ....*
ஐஞ்சீரடி -- ஐஞ்சீரடி ... ... ... *
அருகிவருதலுமியல்பு- அருகிவருதலுஞ்சுபாவமாகும்

உதாரணம்.

அணிகிளர்சிறுபொறி யவிர்தத்திமாநாகத்தெருத்தேறித் *
துணியிரும்பனிமுந்நீர் தொட்டுழந்துமலைத்தனையே... *

இக்கலிப்பாவின் முதலடியும்.

உமணர்ச்சேர்ந்துகழிந்தமருங்கினகன்றலை ... ...*
யூர்பாழ்த்தன்னவோமையம்பெருங்காட் . *
டில்லுவென் றீராயின். ... ... ... *
இனியவோபெருமதமியேற்குமனையே ..., ... *

இவ்வாசிரியத்துள் - முதலடியும் ஐஞ்சீர் வந்தமைகாண்க,

(ய)

கடைகடையிணைகடைக்கூழைபின்னிடைப்புணர் *
வெனவிரணத்தொடைக்கியம்பவும்படுமே ... ...*

இதன்பொருள்.

இரணத்தொடைக்கு - முரண்டொடையை ... *
கடை... ... ... ... ... கடைமுரணும் ... *
கடையிணை...... ... ...கடையிணைமுரணும் ...*
கடைக்கூழை... ..., ...கடைக்கூழைமுரணும் ...*
பின்.....................பின்முரணும் ... ... *
இடைப்புணர்வு... ......இடைப்புணர்முரணும்...*
என......................என்று ... ... ... *
இயம்பவும்படும் -- கூறவும்படும் ... ... *

(யக)

அவற்றுள்.

கடைச்சீர்முரண்கடைமுரணாகும்மே.........*

இதன்பொருள்.

அவற்றுள். முற்கூறியவற்றுள்.

கடைச்சீர்முரண்-அடிதோறுமிறுதிச்சீர்முரணத்தொடுப்பது.
கடைமுரணாகும்- கடைமுரணாகும் ... ... ... ...*

உதாரணம்.

கயன்மலைப்பன்னகண்ணிணைகரிதே...... ........*
தடமுலைதிவளுந்தனிவடம்வெளிதே............ ...*
நூலினுண்ணிடைசிறிதே.........................*
யாடமைத்தோளிக்கல்குலோபெரிதே............. *

எனக்-கடைமுரண் வந்தமைகாண்க.

(௰௨)

கடையிருசீர்முரண்கடையிணைமுரணே............*

இதன்பொருள்.

கடையிருசீர்முரண் - கடையிருசீர்முரணத்தொடுப்பது-*
கடையிணைமுரண் - கடையிணைமுரணாகும்............*

உதாரணம்.

மீன்றேர்ந்தருந்தியகருங்கால்வெண்குருகு... ... *
தேனார்ஞாழல்விரிசினைகுழூஉம் ... ... ... ... ...*
தண்ணந்துறைவன்றவிர்ப்பவுந்தவிரான் ... *
தேரோகாணலங்காண்டும் ... ... ... ... ... *
பீரோவண்ணமுஞ்சிறுநுதற்பெரிதே ... ... ;

எனக்- கடையிணைமுரண்வந்தமைகாண்க.

(௰௩)

இரண்டுநாற்குமெய்தத்தொடுப்பது ... ... *
பின்முரணமெனப்பேசப்படும்மே ... ... *

இதன்பொருள்.

இரண்டும்...... ... இரண்டாஞ்சீரும்........*

எய்தத்தொடுப்பது - முரணத்தொடுப்பது.... .... *
பின்முரணும் ... ... பின்முரணாகும்............ *

உதாரணம்.

சாரலோங்கியதடந்தாட்டாழை...... ......... *
கொய்மலர்குவிந்துதண்ணிழல்விரிந்து...... *

எனப்-பின்முரண்வந்தமைகாண்க.

(௰௪)

ஆதிச்சீரொழித்தல்லனமூன்று.............. *
முரண்கடைக்கூழைமுரணெனப்படுமே ... *

இதன்பொருள்.

ஆதிச்சீரொழித்து.........முதற்சீர்க்கணின்றி ... *
அல்லனமூன்றும் .........ஏனையமூன்றுசீரும் ... *
முரண்......................முரணத்தொடுப்பது... *
கடைக்கூழைமுரண் ... கடைக்கூழைமுரணாகும்.

உதாரணம்.

காவியங்கருங்கட்செவ்வாய்ப்பைந்தொடி......... *
பூவிரிசுரிமென்கூந்தலும். ........................ *
வேய்புரைதோளுமணங்குமாமெமக்கே............ *

எனக்-கடைக்கூழைமுரண் வந்தமைகாண்க.

(௰௫)

இடையிருசீர்முரணிடைப்புணர்முரணே ... ... *

இதன்பொருள்.

இடையிருசீர் — நடுவிருசீரும் — — — .- *
முரண் - -- முரணத்தொடுப்பது — -- *
இடைப்புணர்முரண் - இடைப்புணர்முரணாகும் — *

(உதாரணம்.)

போதுவிரிகுறிஞ்சிநெடுந்தண்மால்வரைக் — — - *
கோதையிற்றாழ்ந்தவோங்கல்வெள்ளருவி -- — *
சாந்தளஞ்செங்குலைப்பசுங்கூதாளி. -. -. • - .- *

என-இடைப்புணர்முரண் வந்தமைகாண்க.

(௰௬)

என்னை-

அருகிக்கலியோடகவன் மருங்கினைஞ்சீரடியும்... ......... ... *
வருதற்குறித்தென்பர்வான் றமிழ்நாவலர்மற்றொருசார் ... *
கருதிற்கடைமையகடையிணைபின்கடைகூழையுமென்.......... *
றிரணத்தொடைக்குமொழிவரிடைப்புணர்வென்பதுவே...... *

என்றாராகலின்.

வருக்கநெடிலினம்வந்தாலெதுகையு ... ... ... *
மோனையுமாமெனமொழிருமுளரோ ... ... ... *

இச்சூத்திரமென்னுதலிற்றோவெனின்,

ஒருசாரெதுகைக்குமோனைக்குமெய்தியதோரிலக்கணமுணர்த்துதனுதலிற்று.

இதன்பொருள்.

வருக்கம் ... வருக்கவெழுத்தும் ... ... ... *
நெடில் ... நெட்டெழுத்தும் ... ... ... *
இனம் ... இனவெழுத்தும் ... ... ... *
வந்தால் ... வரினவற்றை ... ... ... *
எதுகை ... வருக்கவெதுகை - நெடிலெதுகை *
இனவெதுகை................ *
மோனை ... வருக்கமோனை-நெடின்மோனை ... *
இனமோனையும்... ... ......... *
ஆம் ... ஆகும் ...... ..................... *

உதாரணம்.

அறத்தாறிதுவெனவேண்டாசிவிகை ... *
பொறுத்தானோடூர்ந்தானிடை ... ... *

என-வருக்கவெதுகையும்,

ஆவாவென்றேயஞ்சினராழ்ந்தாரொருசாரார்.

என-நெடிலெதுகையும்,

தாக்கார்தகவிலரென்பதவரவ ... ... ... *
ரெச்சத்தாற்காணப்படும் ... ... ... *

என-இனவெதுகையும்,

பகலேபூங்கானற்கிள்ளையோப்பியும் ... ...*
பாசிலைக்குழவியொடுகூதாளம்விரைஇப்......*
பின்னுப்பிணியவிழ்ந்தநல்னெடுங்கூந்தல்...*
பீர்ங்கப்பெய்துதேம்படத்திருகிப் ... ... -*
புனையிரோதிசெய்குறிநரைஇப் ... ... ...*
பூந்தார்மார்பபுனைத்துட்டோன்றிப் ... ... *
பெருவரையடுக்கத்தொருவேலேந்திப் ... *
பேயுமறியாமாவழங்குபெருங்காட்டுப் ... *
பைக்கணுழுவைப்படுபகைவெரீஇப் ... *
பொங்குசினந்தணியாப்பூநுதலொருத்தல்... *
போகாதுவழங்குமாரிருணடுநாள் ;... ... *
பௌவத்தன்னபாயிருணீந்தி ... ... ... *
இப்பொழுதுவருகுவைபாயி ... ... ...*
னற்றார்மார்பதீண்டலெங்கதுப்பே ... ...*

என-வருக்கமோனையும்,

ஆர்கலியுலகத்துமக்கட்கெல்லாம் ... ... ... ...*
ஓதலிற்சிறந்தன்றொழுக்கமுடைமை ... ... ...*

என-நெடிலமோனையும்,

கயலேருண்கண்கலுழநாளும் ... ... ... ... *
சுடர்புரைதிருநுதல்பசலைபாயத் ... ... ... ... *
திருந்திழையமைத்தோளரும்படருழப்பப் ... ...*
போகல்வாழியையபூத்த ... ... ... ... *
கொழுங்கொடியணிமலர்தயங்கப் ... ... ...*
பெருந்தண்வாடைவரூஉம்பொழுதே ... ... ... *

என-இனமோனையும்வந்தமைகாண்க,

(௰௭).

யரலழவிடையுறினாசெனப்படுமே ... ...*

இதன்பொருள்.

யரலழ இந்நான்குமெய்களும்... ...*
இடையுறின் இடையில்வரின் ... ... *
ஆசு ஆசெதுகையாகும் ... ...*

உதாரணம்.

காய்மாண்டதெங்கின்பழம்வீழக்கமுகினெற்றிப் ... *
பூமாண்டதீந்தேன்றொடைகீறிவருக்கைபோழ்ந்து ......*
தேமாங்கனிசிதறிவாழைப்பழங்கள்சிந்தும் ... ... ... *
ஏமாங்கதமென்றிசையாற்றிசைபோயதுண்டே ... *

என-யகரமெய்யும்,

மாக்கொடியானையுமௌவற்பந்தரும் ... ... *
சார்க்கொடிமுல்லையுங்கலந்துமல்லிகைப் ... *
பூக்கொடிப்பொதும்பருங்கானஞாழலும்...*
தூக்கடிகமழ்ந்துதான்றுறக்கமொத்ததே ... *

என-ரகரமெய்யும்,

ஆவேறுருவினவாயினுமாபயந்த... ... ... *
பால்வேறுருவினவல்லவாம் - பால்போ ... *
லொருதன்மைத்தாகுமறநெறியாபோ ...,... *
லுருவுபலகொள லீங்கு. *

என-லகரமெய்யும்,

அந்தரத்துள்ளேயகங்கைபுறங்கையா ............ *
மந்தரமேபோலுமனைவாழ்க்கை-யந்தரத்து... ... *
வாழ்கின்றேமென்றுமகிழன்மின்வாணாளும் ...... *
போகின்றபூளையேபோன்று ... ... ... *

என-ழகரமெய்யும்-ஆசாகவந்தமைகாண்க.

(௰அ)

என்னை.

வருக்கநெடிலினம்வந்தாலெதுகையுமோனையுமென் ... *
றுருக்கப்பெயராலுரைக்கப்படுமுயிராசிடையிட் ......*
டிருக்குமொருசாரிரண்டடிமூன்றுமெழுத்துமொன்றி, *
னிரக்குமெதுகையெய்ஃறுஞ்சிறப்பிலநேரிழையே ... *

என்றாராகலின்.

வண்ணகமம்போதரங்கமிரண்டற் ... ... *
காறடி-சிறுமைதரவாமேனைய ... ... ... *
கலிக்குமூன்றடியாங்கருதிடினே ... ... *

தரவுதாழிசைகட்கடிவரையறையாமாறுணறு.

இதன்பொருள்.

வண்ணகம் - வண்ணகவொத்தாழிசைக்கலிப்பாவும்........ *
அம்போதரங்கம்-அம்போதரங்கவொத்தாழிசைக்கலிப்பாவும் *
இரண்டற்கும் - ஆகியவிரண்டினுக்கும். ... ... *
ஆறடிசிறுமைதரவு-தரவு-ஆறடிசிறுமையாகும் ... ...... *
ஏனையகலிக்கு- இவையொழிந்த- நேரிசையொத்தாழிசைக்கலிப்
[பாவிற்கும்-மயங்கிசைக்கொச்சகக்கலிப்பாவிற்கும்.
மூன்றடிதரவு- தரவுமூன்றடியாகும்... ... ...... ...... *

உ-ம். வந்துழிக்காண்க.

(யக)

தாழிசைச்சீரடிசிறுமைநான்கடி............*
பெருமையாம்பேசுங்காலத்தானே ........*

இதன்பொருள்.

தாழிசைக்கு ... தாழிசைக்கு ................*
ஈரடிசிறுமை ... இரண்டடிசிறுமையாகும்...*
நான்கடிபெருமை... நாலடிபெருமையாகும், ....*

உ-ம். வந்துழிக்காண்க.

(உய)

என்னை.

சுருங்கிற்றுமூன்றடியேனத்தரவிருமூன்றடியே...*
தரங்கக்கும்வண்ணகக்குந்தரவாவதுதாழிசைப்பா *
சுருங்கிற்றிரண்டடியோக்கமிரட்டிச்சுரும்பிமிரும்*
தரங்கக்குழலாய்சுருங்குந்தரவினிற்றாழிசையே... *

என்றாராகலின்.

அடிமுதனிற்பதுகூனுமற்றது .............*
வஞ்சியுளிருமருங்கினும்வருமென்ப ... ...*

மேற்கூறிப்போந்த பாக்கட்கெல்லா மெய்தியதோ ரிலக்கண

முணரு.

## இதன்பொருள்.

அடிமுதனிற்பது ... அடிமுதற்கணிற்பது ... *
கூனும் ... கூனாகும்... ... ... ..*
அது ... ... அக்கூன்... ... ... ...*
வஞ்சியுள் ... ... வஞ்சிப்பாவினுள் ... ... *
இருமருங்கினும்வருமே - முதலினுங் கடையினும் வரும்.
கூனெனினும் ... தனிச்சொல்லெனினுமமையும்.

## உதாரணம்.

உதுக்காண். சுரந்தரனுவண்கைச்சுவானமாப்பூதன்.........*
பரந்தரனுப்பல்புகழைப்பாடி - யிரந்தார்மாட். *
டின்மையகல்வதுபோலவிருணீங்க ... ......*
மின்னுமளித்தேர்மழை... ...... ..............*

இவ்வெண்பாவினுள்.

உதுக்காண் - என- அடிமுதலிற்கூன்வந்தமைகாண்க.

அவரோ. கேடில்விழுப்பொருடருமார்பாசிலை... ... ...*
வாடாவள்ளியங்காடிறந்தோரோ ...... ... ... *

யானே. தோடாரெல்வளைநெகிழவோங்கிப் ...... ... ...*
பாடமைசேக்கையுட்படர்கூர்ந்திசினே... ... *

இவ்வாசிரியப்பாவினுள் - அவரோ - யானே - எனக்கூன்
வந்தமைகாண்க.

உலகினுள். பெருந்தகையாற்பெருந்தகைமைபிறழாவேபிறழினு
இருந்தகையவிறுவரைமேலெரிபோலச்சுடர்விடுமே [ம்
சிறுதகையார்சிறுதகைமைசிறப்பெனினும்பிறழ்வின்றி
யுறுதகைமையுலகினுக்கோரொப்பாகித்தோன்றுவே *

இக்கலிப்பாவினுள்-உலகினுள்-எனக்கூன்வந்தமைகாண்க.

உலகே. முற்கொடுத்தார்பிறகொள்வும்........ ... ... *
பிற்கொடுத்தார் முற்கொளவும்........ ... ... ...... *
முறுதிவழி - யொழுகுமென்ப... .................. *

அதனுல்.

நற்றிறநாடுதன்மை.

பற்றறயாவையும்பரிவறத்துறந்தே .........*

இவ் வஞ்சிப்பாவினுள் - உலகே - எனக்கூன் வந்தமைகாண்க.

மாவழங்கலினமயக்குற்றனவழி ... ... ......*

இவ்வஞ்சியிறுதி - வழியெனக்கூன் வந்தமைகாண்க.

(உச)

என்னை.

பொருளோட்டிமுதனிற்பதுகூனதுவேபொருந்தி *

யிருள்சேர்விலாவஞ்சியீற்றினுநிற்கும். ............*

என்றாராகலின்.

மாச்சீர்முன்வருநாற்சீரடியே ... ... ......*

நேர்முதனிரைமுதனிரனிறையானே ... ...*

பதினேழெழுத்தும்பன்னீரெழுத்து ...... *

மியைந்தளையடியாய்நடந்தஃதிரட்டித் ......*

தொத்துநான்கிறல்கட்டளைக்கலியெனலே...*

(உடு)

முதற்சீர்நான்கும்வெண்டளைபிழையாக் ... *

கடையொருசீரும்விளாங்காயாகி ...........*

நேர்பதினாறேநிரைபதினேழென் ... ......*

றோதினர்கலித்துறைக்கோரடிக்கெழுத்தே...*

(உசு)

ஈரடியிரண்டு ... மோரடிநான்கு ... ...... ...*

முச்சீரொட்டு ... மிருசீரிரட்டியு ... ... ...*

மச்சீர்குறையினு மம்போதரங்கம்.

(உஎ)

அளவடிமுதலாவனைத்தினுநாலு ... ... ...*

முதலாயிரட்டியுமுடுகிபனடக்கும் ... ......*

எட்டுக்கலையாயிடையிட்டெதுகையாக் ... ... ... *
கலைக்கொருமூன்றுகண்ணியாயெட்டுத் ... ... ..., *
தொங்கலாய்விகற்பந்தொடைநாலாருய் ... ... ... *
வருவதுவண்ணமாமெனமொழிப ... ... ... ... *

(உசு)

இயற்பெயர்சார்த்தியெழுத்தளபெழினே ... *
இயற்பாடில்லாவெழுத்தானந்தம் ... ...... *

(உஎ)

இயற்பெயர்மருங்கின்மங்கலமழியத் ... ... *
தொழிற்சொற்புணர்ப்பினதுசொல்லானந்தம்.

(உஅ)

ஒழிபியன்முற்றும்.

---

முத்துவீரியம் - மூலமுமுரையும்

முற்றும்.

